[5th September 1960

மற்ற அரசியல் கட்சிகளைத் தாக்குவது முறையா ? பொதுக் கூட்டங்களில் கலந்துக் கொண்டு மற்ற கட்சிகளை தாக்குவதற்குப் பிரயாணப் படி வாங்குவதாக இருப்பதால், அப்படிச் செய்வது முறையா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது சர்க்கார் சில கொள்கைகளை நிறைவேற்ற முயற்சிக்கிறது. அப்படி கொள்கைகளை நிறை வேற்ற, பொது மக்கள் ஆதரவு வேண்டியிருக்கிறது. அப்பொழுதுதான் அவற்றை நிறைவேற்ற முடியும். அப்படி சர்க்கார் கொள்கைகளுக்கு எதிராகப் பிரசாரம் நடந்தால், எங்கள் கொள்கைகளை எடுத்து மக்களுக்குச் சொல்லி, எதிரி வாதங்களுக்குப் பதில் சொல்ல வேண்டியது மந்திரிகளின் பொறுப்பு. அப்படிச் செய்யாவிட்டால், சர்க்கார் பொறுப்புகளைச் சரிவர நிறைவேற்றியதாகாது.

SRI A. MARIAPPAN : இப்பொழுது எஸ்டிமேட் கமிட்டி போன்ற கமிட்டிகளில் சுற்றுப் பிரயாணம் செய்யும்போது, அங்கத்தினர்கள் கட்சிக் கூட்டங்களுக்கும் போகிறார்களே, அந்த சமயத்தில் படி வாங்குகிறார்களே, அது சரியா ?

MR. SPEAKER : The question is out of order.

SRI C. NATARAJAN : தலைவர் அவர்களே, அமைச்சரவர்கள் சர்க்கார் படியில் போய், வெளியில் மற்றக் காரியங்களில் கலந்துக்கொள்ள வில்லை என்று சொன்னார்கள். இப்பொழுது, முதல் அமைச்சர் அவர்கள் காலையில் பொதுக்காரியத்தில் ஈடுபட்டு, பிறகு காங்கிரஸ் கட்சிக் கூட்டமும், ரகசியமாக ஊழியர்கள் கூட்டமும் கூட்டிப் பேசுகிறார்களே, அது சரியா ?

MR. SPEAKER : போகவில்லை என்று சொல்ல வில்லையே.

THE HON. SRI C. SUBRAMANIAM : I will again read for the benefit of the hon. Member. If party work is combined with official tours, no travelling allowance is claimed for the journey and halt involved in such party work.

*Electric pump-sets*

* 438—SRI N. R. THIAGARAJAN : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் மதுரை ஜில்லாவில் 1,725 மின்சார பம்பு செட்டுகள் "ஹையர் பர்ச்சேஸ்" திட்டத்தில் கொடுப்பதாக திட்டமிட்டபடி கொடுக்கப்பட்டதா ?

(ஆ) இவை எந்தெந்த பிளாக்கில் எத்தனை கொடுக்கப்பட்டன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) & (b) The information is being collected and will be placed on the table of the House.

*Assignment of lands to the poor*

* 439 Q.—SRI. S. M. ANNAMALAI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) காட்டு இலாகாவுக்குச் சொந்தமான நிலங்கள் காடுகளுக்குத் தகுதியற்றதென்று நிலமில்லா ஏழைகளுக்கு மாவட்டங்கள் வாரியாக எவ்வளவு நிலம் பட்டா செய்யப்பட்டது ?

(ஆ) வட ஆற்காடு மாவட்டத்தில் போளூர் தாலூகாவில் எவ்வளவு நிலம் பட்டா செய்யப்பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) There are no lands under forests, which are not fit to be maintained as forests. In the past two years, an extent of 20 acres only in Suryamalai

5th September 1960]

Reserved Forest in Tiruchengode taluk, Salem district, was dis-reserved as a special case for assignment to some persons.

(*b*) No lands belonging to the Forest Department were granted on patta in Polur taluk.

SRI S. M. ANNAMALAI : ஸார், உண்மையிலேயே சில இடங்களில் வேண்டுமென்றே, காட்டு வளர்ச்சிக்கு என்று காட்டு இலாகாவினர் நிலங்களை எடுத்துக் கொண்டு, நிலமில்லாதவர்களுக்குக் கொடுக்க மறுக்கிறார்கள். உண்மையிலேயே, எந்தெந்த இடங்களில், அப்படி நிலங்கள் இருக்கின்றனவோ, அவற்றை நிலம் இல்லாதவர்களுக்குக் கொடுப்பதால் உணவு உற்பத்தி அதிகரிக்கும் என்பதை பரிசீலனை செய்யக்கூடாதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த ராஜ்யத்தில் காட்டுச் செல்வம் மிகக் குறைவு. ஆகவே, வனம் வளர்க்கத் தகுதியான நிலங்கள் பயன் படுத்தப் படுகிறது. வன வளர்ச்சிக்குப் பயன்படாதிருந்தால், மற்றபடி சாதாரண விவசாயத்திற்குக் கொடுக்கிறோம்.

SRI T. IRUSAPPAN : ஏற்கெனவே இருந்த காடுகளில் விவசாயம் செய்துக் கொண்டிருந்தவர்களை போகச் சொல்லியும், இன்னும் சர்வே செய்யும் இடத்தில், விவசாயம் செய்துக் கொண்டிருந்தவர்களை அப்புறப்படுத்தி அந்த நிலங்களையும் காட்டில் சேர்த்திருக்கிறார்கள். அதனால், விவசாயிகள் அவதியுறுகிறார்கள். அதைத் தடுக்க சர்க்கார் என்ன ஏற்பாடு செய்யப்போகிறார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : விவசாயம் செய்யக் கடிய நிலங்களைக் காட்டுக்கென்று எடுக்க வில்லை. சிலர் அக்கிரமமாக ஆக்ரமித்திருக்கலாம், அம்மாதிரி நிலங்கள் காட்டு வளர்ச்சிக்குப் பயன் பட்டால், அது வன வளர்ச்சிக்கு எடுக்கப் படுகிறது.

SRI J. MATHA GOWDER : காட்டு வளர்ச்சிக்கு, மரம் செடி நட லாயக்கற்ற பூமி, லாயக்குள்ள பூமி என்று சர்வே செய்யும் அளவில் காட்டு இலாகாவினர் நடவடிக்கை எடுக்கிறார்கள். அதைப் பரிசீலிக்க சர்க்காரிலே ஒரு எக்ஸ்பர்ட் கமிட்டி நியமித்து அங்கங்கே உள்ள நிலங்களை காட்டு வளர்ச்சிக்கு என்று சர்வே செய்ய, ஏற்பாடு செய்ய முன் வருவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : : அங்கத்தினரவர்களுடைய யோசனையை ஏற்றுக்கொள்ள கொஞ்சம் கூட இடமில்லை.

SRI P. G. MANICKAM : கோயம்புத்தூர் தாலவாடியிலுள்ள நிலங்கள் சாகுபடிக்கு லாயக்குள்ளவைகளாக இருக்கும் காரணத்தினால் அதை காட்டிலாகாவிலிருந்து, சாகுபடிக்குக் கொடுக்க, அந்த மலைப்பிரதேசத்தை, சாகுபடிக்கு லாயக்குள்ளதா என்று சர்க்கார் பரிசீலனை செய்து நடவடிக்கை எடுக்க முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அந்தத் தகவல் என்னிடம் ஒன்றும் இல்லை.

SRI K. R. VISWANATHAN : தலைவர் அவர்களே, உடையார் பாளையம் ஜமீன் சூரியமணல் காடுகளில் 50 ஆண்டுகளுக்கு மேல் விவசாயக் குடிமக்கள் வாழ்ந்து வந்திருக்கிறார்கள். அவர்கள் சூரியமணல் காட்டை அடமானத்திற்கு கேட்கிறார்கள். அவர்கள் வசிக்கும் வீடுகள் முதலியவற்றை அவர்களுக்கே கேட்கிறார்கள். அம்மாதிரி உத்தரவுபோட்டு, ஏழைக் குடியானவர்கள் வசித்து விவசாயம் செய்ய உத்தரவு போட சர்க்கார் முன்வருவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அங்கத்தினர் தனிக் கேள்வி போட்டால் விடையளிக்கிறேன்.